4 பக்கம் விலை 0—1—0

JANASAKTHI
Phone 85777

# ஜனசக்தி

கம்யூனிஸ்ட் கட்சி தின இதழ்
COMMUNIST TAMIL DAILY

இலங்கையில் 10

மலர் 8 | சென்னை 6—7—52 ஞாயிறு ★ வெளியூர் 7—7—52 திங்கள் | இதழ் 20

### 1000 விவசாயிகள் பட்டினி ஊர்வலம்

திருப்பதி, ஜூலை 4—

சந்திரகிரி தாலுகாவில் எல்லா கிராமங்களிலிருந்தும் சுமார் 1000 விவசாயிகள் ஒரு பட்டினி ஊர்வலமாக சந்திரகிரி சப் கலெக்டரிடம் சென்று தங்கள் குறைகளை தெரிவிததனர். தங்களுக்கு, உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு நிற்பதற்கும் கடன்வசதி கொடுக்கப்படவில்லையென்று கூறினர். கஞ்சித் தொட்டில் மிகவும் மோசமான கஞ்சி கொடுப்பதாகப் பெண்கள் புகார் செய்தனர்.

### 200 வருடத்திற்கு தேவை[யான] காகித சேமிப்பு!

புதுடில்லி, ஜூலை 4—

"ஒரு ரயில்வேயில் 200 வருடங்களு[க்]குத் தேவையான காகிதம் சேமித்துவை[க்]கப்பட்டிருப்பதாக ரயில்வே ஸ்டோர்[ஸ்] விசாரணைக் கமிட்டி கூறியிருப்ப[து] உண்மைதானா?" என்று தோழர் கே[.] அனந்தநம்பியார் இன்று மக்கள் சபையி[ல்] ரயில்வே மந்திரியைக் கேட்டார்.

எனக்கு அதுபற்றி தகவல் தெரியாது என்று ரயில்வே மந்திரி தன் அறியாமையை வெளியிட்டார்.

# வரி சுமத்துவதற்கு ஒரு ஐக்கிய முன்னணி!

## ஆச்சாரியாரின் புதிய முயற்சி

## முஸ்லிம் லீக், ரங்கா கட்சி, மாணிக்கவேலர்-கட்சியுடன் கூட்டணி?

சென்னை, ஜூலை. 5—

மக்கள் மீது புதிய வரிகளைச் சுமத்த முயற்சிக்கிற புதிய பட்ஜெட்டுக்கு சட்டசபைகளுக்குள்ளே பலதரப்பட்ட அங்கத்தினர்களிடையே எதிர்ப்பும், கண்டனமும் தெரிவிக்கப்படுகிறது; வெளியே அவற்றை கடுமையாக விமர்சிக்காத பத்திரிகையும் இல்லை; இராச்சியமெங்கும் மக்களின் கிளர்ச்சியும், ஆர்ப்பாட்டங்களும் விரிவடைந்து வலுபெற்று வருகிறது. காங்கிரஸ் எம். எல். ஏக்கள் மத்தியிலே எதிர்ப்பு இருப்பதால் கடுமையான கட்சி கட்டுப்பாட்டை ஆச்சாரியார் திணித்துள்ளார்.

ஜூலை 6ந் தேதியை கண்டன தினமாகக் கொண்டாடும்படி கம்யூனிஸ்ட் கட்சி விடுத்துள்ள கோரிக்கை இந்த மாபெரும் பொதுஜன வரி எதிர்ப்புக் கிளர்ச்சியை ஒருமுகப் படுத்தி பலப்படுத்தி வருகிறது.

இந்த ஜனசக்தியின் முன்னே ஆச்சாரியார் காங்கிரஸ் மீண்டும் ஆட்டங்கண்டு வருகிறது. அவர் அமைத்த கம்யூனிஸ்ட் எதிர்ப்பு முன்னணி சரிந்து வருகிறது.

வரிச்சுமையை மக்கள் மீது போட்டு பட்ஜெட்டை நிறைவேற்றுவதற்காக ஆச்சாரியார் உடனடியாக செயலில் இறங்க வேண்டியதாயிருக்கிறது. நாளை ஞாயிற்று ராஜாஜி ஹாலில் நடக்கும் சட்டசபை காங்கிரஸ் கட்சிக் கூட்டத்தில் கலந்து கொள்ளும்படி முஸ்லீம் லீகையும், காமன்வீல் கட்சியையும், கிருஷிக்லோக் கட்சியையும் ஆச்சாரியார் அழைத்துள்ளார். சில சுயேச்சையாளர்களும் அழைக்கப்படலாம்.

காங்கிரஸ் அல்லாத இதர கட்சியினரை இவ்வாறு அழைத்து கலந்தாலோசிப்பது இதுவே முதல் தடவை என்பது அர்த்த புஷ்டியுள்ள விஷயமாகும். இந்த யோசனையை ஆச்சாரியாருக்கு அளித்தவர் ஜஸ்டிஸ் கட்சித் தலைவர் சர் பி. டி. ராஜன் என்பதும், இந்த யோசனையை "ஹிந்து" தலையங்கம் (5-7-52) பலமாக ஆதரித்திருப்பதும் கவனிக்கத் தக்கது.

வரி சுமத்தும் ஜனவிரோத "ஐக்கிய முன்னணியை" ஆளும் வர்க்கம் சிருஷ்டிக்கப் பார்க்கிறது! கம்யூனிஸ்ட் எதிர்ப்பு என்று சொல்லிக் கொண்டு!

நம்பிக்கைத் தீர்மானம் கொண்டு வந்தது. இந்த பிற்போக்கு முன்னணியை சிருஷ்டிப்பதற்குத்தான், வரிகளைச் சுமத்துவதற்குததான், எனபது தெளிவாகி வருகிறது.

## துண்டுவிழும் பட்ஜெட்டுக்கு மக்கள்மீது புதிய வரிச்சுமைகளா?

### தோழர் சக்கரை செட்டியாரின் எதிர்ப்பு

சென்னை, ஜூலை 24—

சென்னை சர்க்காரின் பட்ஜெட்டைப் பற்றிய பொது விவாதம் இன்றும் சென்னை சட்டசபையிலும், மேல்சபையிலும் தொடந்து நடைபெற்றது. ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் சர்க்காரின் பட்ஜெட்டை ஆதரித்துப் பேசிய போதிலும் சர்க்காரின் சிலவினங்களில் ஏராளமாகப் பணம் விரயம் செய்யப்படுவதைக் கண்டித்துப் பேசினார். இன்னும் பல காங்கிரஸ் ஆதரவாளர்கள் புதிய வரிகளைக் கண்டித்துப் பேசினர்.

சென்னை மேல்சபையில் தோழர் வி. சர்க்கரை செட்டியார் பேசுகையில், பட்ஜெட்டில் துண்டு விழும் தொகையை சரிக்கட்டி மக்களின் தலைமீது புதிய வரிகளைப் போடவேண்டிய அவசியமில்லையென்றார். பஸ் கட்டணங்களின்மீது விதிக்கப்படும் வரியையும், நிலவரியின்மீது விதிக்கப்படும் உபரி வரியையும் பூரணமாக நிராகரிக்க வேண்டுமென்றார். உணவுக் கண்ட்ரோல் ஒழிப்புக் கொள்கை வெற்றியடையுமென்பதில் எனக்கு நம்பிக்கையில்லை என்றார், விலைவாசிகள் ஸ்திரமடைந்தாலும் கூட அவை பழைய கள்ளமார்க்கெட் விலை மட்டத்தில்தான் ஸ்திரமடையும். அத்தகைய நிலையில் இந்தப்புதிய வரி விதிப்புகள் மக்களுக்கு மிகவும் ஆபத்தானவை என்றார்.

தேர்தல்களில் காங்கிரஸ் தோற்றதற்கு சேலம் ஜெயில் துப்பாக்கிப் பிரயோகமும ஒரு காரணமென்றார்.

காங்கிரஸ் எம். எல். ஏ. வி. கே. பழனிசாமிக் கவுண்டர் சென்னை சட்டசபையில் பேசுகையில் நிலவரிக்கு உபரிவரி விதிப்பதைக் காட்டிலும் விவசாய வருமான வரி விதிப்பதையே தான வரவேற்பதாகக் கூறினார்.

திரு, வேமாரெட்டி (காங்) பேசுகையில் நிலவரி சர்சார்ஜ 100 ரூபாய்க்கு மேலுள்ள வரித் தொகைக்குத்தான் விதிக்க வேண்டுமென்றார். பஸ் கட்டண வரி கூடவே கூடாதென்றார். வேண்டுமென்றால் பெட்ரோல் வரியை உயர்த்துங்கள் என்றார்.

மதுவிலக்கு சட்டத்தை ரத்து செய்வதின் மூலம் பட்ஜெட்டில் துண்டுவிழும் தொகையைச் சரிகட்ட வேண்டுமே தவிர, ஏழை மக்களை பாதிக்கும் புதிய வரிகளைப் போடக்கூடாதென்று வி. கோபால கவுண்டர் கூறினார்.

சுயேச்சை லேபிளில் தேர்ந்தெடுக்கப்பட்ட காங்கிரஸ் பக்தர் கே. டி. கோசல்ராம், பேசுகையில் மணிமுத்தார் அணைக்கட்டு திட்டத்திற்கு ரூ. 10 லட்சம்மட்டுமே ஒதுக்கியிருப்பது மிகவும் பற்றாக்குறை என்று சர்க்காரைக் குறை கூறினர்.

தோழர் பி. கே. கோபால கிருஷ்ணன் பேசுகையில், சர்க்காருக்கு நம் நாட்டைத் தொழில் மயமாக்குவதைப் பற்றிக் கொஞ்சமும் கவலை கிடையாதென்றும், பிற்போக்கான காலனி விவசாய அமைப்பையே இந்த பட்ஜெட் நிலைநிறுத்துகிறதென்றும் கூறினர்.

## சஞ்சீவி ரெட்டியின் இரட்டைக்குரல்

### "ஆந்திர மாகாணம் கோரிக்கை ஒத்திவைக்கலாம்: ஆந்திர மாகாணம் உடனே வேண்டும்"!

விஜயவாடா, ஜூலை 5—

"ஆந்திர மாகாணக் காங்கிரஸ் தலைவர் என்ற முறையில் தனி ஆந்திர மாகாணக் கோரிக்கையை ஆதரிக்கிறேன். ஆனால், என் தனிப்பட்ட முறையில் ஆந்திர மாகாண கோரிக்கையை ஒத்திவைக்கலாம் என எண்ணுகிறேன்" என்று சஞ்சீவி ரெட்டி, இரட்டைக் குரலில் பத்திரிகை நிருபர்களிடம் கூறினார்.

சென்னை நகரப் பிரச்னையை ஆந்திரர்கள் தங்களுக்குள் தீர்த்துக்கொண்டால் ஆந்திர மாகாண காங்கிரசின் காகினாடா தீர்மானத்தைப்பற்றி ஆலோசிக்கலாம் என சஞ்சீவ ரெட்டியிடம் பண்டித நேரு கூறினாராம்.

காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டத்தில் கலந்துகொண்டு [...] ரெட்டி இன்று இங்கு [...]னர். மொழிவாரி மாகா[ண] பிரச்னையை காங்கிரஸ் பா[ர்லி]மெண்ட் கட்சி பரிசீலிப்ப[...] காரியக்கமிட்டி அதைப்ப[ற்றி] ஒன்றும் விவாதிக்கவில்லை எ[ன்று] கூறினர்.

ஜவஹர்—வல்லபாய்—பட்[டாபி] (ஜ. வ. ப.) அறிக்கையின [அடிப்]படையில் உடனடியாக [ஆந்திர] மாகாணம் அமைக்க [நட]வடிக்கைகள் எடுக்க[வேண்டு]மென ஆந்திர மாகா[ண காங்]கிரஸ் கமிட்டி காகினாடா[...] சமீபத்தில் தீர்மானம் [நிறை]வேற்றியது.

காங்கிரஸ் காரியக் கமி[ட்டி கூ]ட்டத்தில் கலந்துகொள்[ள...]குப் போகும்வழியில், "[ஆந்]திரா உடனடியாகப் பெ[...]காக தெலிங்கானா மக்கள் [...] செய்ய வேண்டுமென" [...] ரெட்டி ஹைதராபாத்தில் [...] செய்தார்.

[...]று, காரியக்கமிட்டிக் [கூட்டத்தி]லிருந்து திரும்பி[ய]வுடன், ஆந்திர மாகாணம் [...] படுவதை ஒத்திவைக்கல[ாம் என்று] தான் [...] தனிப்பட்ட முறை[யில்] நினைப்பதாக அவர் அறி[வித்தார்].

### காங்கிரசுக்கு எதி[ரிகள்] கம்யூனிஸ்ட்

இன்று நம் நாட்டில் காங்[கிரஸ்] தான மிகவும் பலம் பொரு[ந்திய] பெரிய அரசியல் கட்சி. [காங்கிரஸு]க்கு பலமான எதிரிகள் [கம்யூ]னிஸ்ட்கள்தான் என அவர் [கூறி]னார். எனவே. கம்யூனிஸ்[டுகளை] ஒழிப்பதற்காக எல்லா [ஜன]நாயக கட்சிகளும்' ஒன்[று சேர] வேண்டுமென அவர் கூ[றினார்].

## கொரிய யுத்தக் கைதிகள் மீது புதுரக ஆயுதப் பரிசோதனை

### பிரிட்டிஷ் சர்க்காரின் ரகசிய திட்டம்

பீகிங், ஜூலை 5—

புதிய யுத்த ஆயுதங்களைப் பிரயோகித்துப் பரீட்சை செய்வதற்காக கொரிய யுத்தக் கைதிகள் ஆஸ்திரேலியாவிற்கு பிரிட்டிஷ் ராணுவத் தலைமையால் அனுப்பப் படுகிறார்கள், இந்த முக்கிய தகவலை சோவியத் செய்தி ஸ்தாபனம் டாஸ் வெளியிட்டுள்ளதாக பீகிங் ரேடியோ அறிவித்தது. ரேடியோ மேலும் கூறியதாவது:—

"அமெரிக்க ராணுவ காரியதரிசியும், அமெரிக்க தூரக் கிழக்கு விவகார உதவி காரியதரிசியும், அமெரிக்காவிலுள்ள பிரிட்டிஷ் ஸ்தானீகரான ஸர். ஆலிவர் பிராங்க்சும் கலந்து பேசுகையில், மக்கள் கொரிய, சீனத் தொண்டர்படை யுத்தக் கைதிகளை ஆஸ்திரேலியாவிற்கு அனுப்ப முடிவு செய்யப்பட்டது.

"இந்த யுத்தக் கைதிகள் மீது புதுரக ஆயுதங்களைப் பிரயோகித்து பரிசோதனை செய்ய பிரிட்டிஷ் சர்க்கார் திட்டமிட்டுள்ளதாக வாஷிங்டனில் நம்பப்படுகிறது. 500 யுத்தக் கைதிகளை ஆஸ்திரேலியாவிற்கு அனுப்ப அமெரிக்கர்கள் ஒப்புக்கொண்டார்களாம். கோஜே யுத்தமுகாமிலிருந்தும், இதர முகாம்களிலிருந்தும் அமெரிக்க தளபதிகள் கிளார்க், போட்னர்களின் உத்திரவுப்படி யுத்தக் கைதிகள் பொறுக்கப்படுவார்களாம். யுத்தக் கைதிகள் பரிவர்த்தனை சம்பந்தமாக 'அமெரிக்கா கூறும் மனிதாபிமானக் கோட்பாடுகளின் உண்மை சொரூபம் இதுதான்."

## மலானை எதிர்த்து தெ. ஆ. பெண்கள்

ஜோஹன்னஸ்பர்க், ஜூலை 4—

பெண்கள் நடவடிக்கைக் கமிட்டியால் கூட்டப்பட்ட கூட்டத்தில் ஆயிரக்கணக்கான பெண்கள் தெ. ஆப்ரிக்க பாஸிஸ்ட் மலானின் சர்க்காரை ஒழிப்பதற்கு எல்லா முயற்சிகளும் செய்வதென்று உறுதிமொழி எடுத்துக் கொண்டனர்.

## ஜூலை 12: பெரிய அளவி[ல்] ஜனசக்தி வெளிவரும்

ஜூலை 12ம் தேதி சனிக்கிழமை முதல் (வெளி[யூர்] 13-7-52 ஞாயிறு) ஜனசக்தி பெரிய அளவில்,

★ பி. டி. ஐ. ராய்ட்டர், நவ சீன செ[ய்தி] ஸ்தாபனம், டாஸ் முதலிய செய்திகளுடன்,

★ மார்க்கெட் நிலவரம், வாநிலை, ரேடி[யோ] முதலிய செய்திகளுடன் வெளிவருகிறது

சென்னை 11-7-52 (வெளியூர் 12-7-52) தேதி[யில்] ஜனசக்தி வெளிவராது.

நிர்வாகி
ஜனசக்தி

ஜனசக்தி

ஞாயிற்றுக்கிழமை 6-7-1952

# நீர்ப்பாசன அபிவிருத்தி வரி

ஆச்சாரியார் சர்க்கார் நீர்ப்பாசன அபிவிருத்தி வரி என்ற புதிய வரியை விவசாயி மக்கள் மீது சுமத்த புறப்பட்டுள்ளது.

கிணறு வெட்டியது முதற்கொண்டு பெரிய அணைக்கட்டுத் திட்டம் வரையில், 1943-ம் ஆண்டிலிருந்து சர்க்கார் அமுலுக்குக் கொண்டுவந்த எல்லா நீர்ப்பாசன அபிவிருத்திகளாலும் லாபம் பெறுகிற அல்லது லாபம் பெறக்கூடிய எல்லா நிலங்கள் மீதும் இந்த வரி விழும். இந்த நீர்ப்பாசன வசதி கிடைத்தபிறகு விவசாயி ஏற்கனவே செலுத்திவருகிற தண்ணீர்த் தீர்வை போதாதென்று மேற்கொண்டு இந்த வரி சமத்தப்படுகிறது.

சர்க்காரின் நிர்ப்பாசன அபிவிருத்தி மூலமாக கூடுதலாக கிடைக்கும் நிகரலாபத்தை முப்பது மடங்காகப் பெருக்கி வரும் தொகையை அந்த நிலத்தின கூடுதலான மூலதன மதிப்பீடு என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொகையில் பாதி வரியாகச் செலுத்தவேண்டும். வருடந்தோறும் செலுத்தும் வகையில் 20 ஆண்டுகள் தவணை அளிக்கப்படுகிறது.

அதாவது நீர்ப்பாசன அபிவிருத்தியினால் ஏதாவது கூடுதலாக லாபம் கிடைக்கிறது என்றால் அது விவசாயியைப் பொறுத்தவரை இருபது ஆண்டுகளுக்கு (ஒரு தலைமுறை முழுவதற்கும்) கிடைக்காது என்று அர்த்தம். அதை சர்க்கார் உறிஞ்சிக் கொண்டேயிருக்குமாம்.

விஷயம் அம்மட்டோடு நிற்கவில்லை. ஆண்டுதோறும் வரி செலுத்தி வருகிற காலத்தில், பாக்கித் தவணைகளில் செலுத்தப்பட வேண்டிய தொகைக்கு வட்டி வேறு கட்டியழ வேண்டும் என்று மசோதா கூறுகிறது. வரியை தவணைகளில் செலுத்தலாம் என்று கூறிவிட்டு அதன் மீது வட்டி வசூலிப்பது ஆச்சாரியாரின் ஒரு அலாதியான ஏற்பாடாகும். விற்பனை வரியை சிருஷ்டித்த சாணக்கிய மூளையில் மட்டுமே இந்த யோசனையும் உதிக்க முடியும்.

விவசாயி மக்கள் மீது வரி போடுவதில் ஆச்சாரியாருக்கு அளவு, வரம்பு, என்பதொன்றும் கிடையாது. 1943ம் ஆண்டிலிருந்து செய்யப்பட்ட நீர்ப்பாசன வசதிகளுக்கெல்லாம் வரிபோடப்படுகிறது. அந்த வசதிகளை செய்து தரவேண்டுமென்று அதற்கு முன்பே பல்லாண்டுகளாக விவசாயிகள் கிளர்ச்சி செய்து வந்ததும், அநியாயமான அடிப்படையில் நிலவரி செலுத்தி வந்ததும் ஆச்சாரியார் மறந்து விட்டார். இறந்த காலத்திய கூப்பாடும் காதில் விழவில்லை; நிகழ்காலத்திய கூக்குரலும் காதில் விழவில்லை.

இந்த வரிவிதிப்பைக் கண்டு விவசாயிகள் ஆத்திரம் கொள்வது நிச்சயம். சர்க்காரின் நீர்ப்பாசன அபிவிருத்தி நாசமாய் போக! என்று சபிக்கும் நிலைக்கு, வெறுப்புணர்ச்சியை விவசாயிகளிடையே உண்டாக்கும். அந்த எதிர்ப்பைச் சுட்டிக்காட்டி மக்கள் நீர்ப்பாசனத் திட்டங்களை வேண்டாமென்கிறார்கள், கம்யூனிஸ்டுகள் ...ர்க்கிறார்கள் என்று ஆச்சாரியார் சர்க்கார் அவதூறு செய்யப்படும்.

இந்த அபிவிருத்தியின் விளைவாக கணக்கிடப்படுகிற கூடுதலான லாபத்தின் அளவை எப்படி நிர்ணயிக்கிறார்கள்? இன்றைய ...வசாய விளைபொருட்களின் விலைகளின் அடிப்படையில் தான்! ...டுத்த முப்பது ஆண்டுகளுக்கு இந்த விலைவாசிகள் ஏறத்தாழ ...ப்படியே இருக்குமென்று எதிர்பார்ப்பது மடத்தனம் என்று வா...பதை விட விவசாயிகளைக் கொடுமையாக வஞ்சிப்பது என்று ...ரிப்பது பொருத்தமாகும். 1943லிருந்து வரி வசூலிக்கும் சர்க்... இவ்வாண்டு மார்ச் ஏப்ரல் மாதங்களில் விளைபொருட்களின ...வாசிகள் கீழ்நோக்கி செங்குத்தாக விழுந்ததை அறியாதிருக்...? அந்த மரண அடி தாங்கமுடியாமல் உயிருக்குப் போராடி ...விவசாயிகள் கடனசுமை அதிகரித்துத் தத்தளித்து வருகை...ப் புதிய வரியைக் கட்டுவதற்கு புதிதாக கடன வாங்கித் ...டிய தேறப்படும். கடன்சுமை விவசாயிகளை மேலும் அழுத்...ல்லும்.

...தொழிலை ஆரம்பிப்பதற்கு முதலாளிகள் மூலதனம் ...தின்மீது சர்க்கார் வரி விதிக்கிறதுண்டா? கிடையாது. ...யைப் போட்டு முதலாளிகள் அந்த மூலதனத்தை அதி...தின்மீது சர்க்கார் வரி விதிப்பதும் உண்டா? கிடை...ல் நீர்ப்பாசன அபிவிருத்தி மூலம் நிலத்தின் மூலதன ...ந்தால் அதற்குமட்டும் வரி போடுவது நியாயமாகுமா? ... சர்க்காருக்குச் சொந்தம் என்று ஆச்சாரியார் சர்க்... கொண்டாடி அதன் மூலதன மதிப்பு பெருகியதின் ...படையில் நிலத்தின் போகத்தை அனுபவிக்கும் விவசாயி ... வரி கேட்டால் நி... கோட்பாடு இருக்கிறது என்று ...ள்ளக் கூடும். ...ல் சர்க்காருக்கே நிலம் பூராவும் ... விவசாயிக்கு உ...யாக பாத்தியதை மட்டுமே உண்டு ...ன அங்கீகரித்தால் நிலத்தை வாங்கி விற்கும் உரிமை சட்ட...ோகிவிடும். ஆச்சாரியார் சர்க்கார் அந்தக் கோட்பாட்டை ...றவில்லை. விவசாயிகளுக்குச் சொந்தமானது என்று அங்...ுள்ள நிலத்தின் அபிவிருத்தியில் சர்க்கார் பங்கு கேட்... இது என்ன நியாயம்?

...ப்பாசன அபிவிருத்தியினால் விவசாயிக்கு கொடுக்கும் தண்...கு சர்க்கார் தண்ணீர்த் தீர்வை வாங்கிவிடுகிறதே, அதற்கு ... அதிகமாக வரிபோட நியாயமேது?

...சோகன் ஆண்ட காலத்திலிருந்து, பண்டைய தமிழ் அரசர் ...ண்ட காலத்திலிருந்து, நீர்ப்பாசன அபிவிருத்தி செய்து ... ஒரு அரசின் பொறுப்பாக இருந்து வந்துள்ளது. ... பண்டைக்காலத்து அரசுகள் எதுவும் அதன் சுமையை ...யிகள் மீது போட்டதில்லை. ஆனால் ஆச்சாரியார் மட்டுமே ...ிய விவசாயி—சுரண்டல் அத்தியாயத்தை இந்திய வரலாற்...டங்கியிருக்கிறார். தோற்றுப்போன கோபால ரெட்டியும், ...ம் ராஜாவும் கைவிட்ட இந்தப் படுமோசமான வரியை, ...கை தீர்மானம்" என்கிற போர்வையினகீழ் மெஜாரிட்டி ...டமாரமடித்துக்கொண்டு ஆச்சாரியார் மக்கள்மீது திணிக்க...றார்.

...த வரியை எதிர்த்து விவசாயி மக்களுடன் ஒன்றுபட்டு ...றத்து மக்களும் கிளர்ச்சி செய்ய வேண்டும். விவசாயிகளைத் ...ல் உணவு உற்பத்தியும், விளைபொருள் உற்பத்தியும் கீழ் ... போய்விடும்; நகரப்புறத்து மக்களுக்கு அதனால் பாதகம் ...ரயும்.

இப்படிப்பட்ட வரிச்சுமைகளை மக்கள் மீது போட, சட்டசபை ...ஆச்சாரியார் உருவாக்கிவரும் "ஐக்கிய முன்னணியை" ...தெறிந்து, வரி மசோதாக்களை வாபஸ் பெறும்படி நிர்ப்பந்... மக்களின் உடனடி கடமையாகும். ஐ.ஜ.மு.வின் முயற்...ல்லா ஜனநாயகக் கட்சிகளும், விவசாய சங்கங்களும் இதர ...ன ஸ்தாபனங்களும் பலம் தேடித்தர மாபெரும் கண்டன ...த்தில் இறங்க வேண்டும்.

# ரிட்ஜ்வேயை லண்டனுக்கு வரவிடாதீர்கள்!

## பிரிட்டிஷ் மக்களுக்கு கம்யூனிஸ்ட் கட்சி வேண்டுகோள்

லண்டன், ஜுலை 5—

மேற்கு ஐரோப்பிய யுத்த முகாமின் பிரதான தளபதியான ரிட்ஜ்வே ஐசன் ஹோவரிடமிருந்து பதவியை ஏற்ற பிறகு முதல் தடவையாக வருகிற புதன்கிழமை லண்டனுக்கு வருகிறார். அவர் மேற்கு ஐரோப்பிய யுத்த முகாமைச் சேர்ந்த நாடுகளில் யுத்தத்திற்கான தயாரிப்புகள் சரியாக நடைபெறுகின்றனவா என்று மேற்பார்வையிட வருகிறார்.

ரிட்ஜ்வேயின் வருகையை முன்னிட்டு சகல விதத்திலும் தங்கள் கண்டனத்தை தெரிவிக்கும் பிரிட்டிஷ் கம்யூனிஸ்ட் கட்சி பிரிட்டிஷ் மக்களுக்கு வேண்டுகோள் விடுத்துள்ளது.

லண்டன ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி 'டெயிலி ஒர்க்கர்' பத்திரிகையில் ஒரு அறிக்கை விடுத்துள்ளனர், அதில் ரிட்ஜ்வே இங்கிலாந்திற்கு வருவது சமாதான சுதந்திர பிரிட்டனை விரும்புபவர்களுக்கு ஒரு சவால்." என்றும் ஆகவே பொதுமக்கள் குறிப்பாக தொழிலாளிகள், அவர் வருவதைக் கண்டித்து "நோட்டீஸ்கள் போடவேண்டும். கூட்டங்கள் போட்டு தீர்மானங்கள் நிறைவேற்றவேண்டும்; சகல முறைகளிலும் தங்கள் கண்டனத்தை தெரிவிக்கவேண்டும். குறிப்பாக தொழிற்சாலைகளிலும் தொழிற்சங்கங்களிலும் இவை நிறைவேற்றப்பட வேண்டும்", என்று கேட்டுக்கொண்டுள்ளது.

## 'புதிய மார்க்சிஸ்ட் கட்சி'

பம்பாய், ஜுலை 5—

கம்யூனிஸ்டுகளையும், சோஷலிஸ்டுகளையும் ஒதுக்கி விட்டு; இதர இடதுசாரி குருப்புகளைக் கொண்ட ஒரு மகாநாடு பம்பாயில் விரைவில் கூடப் போகிறதாம். அதில் ஒரு அகில இந்திய மார்க்ஸிஸ்ட் கட்சி ஏற்படுத்துவதைப் பற்றி யோசிப்பார்களாம். புரட்சிகர சோஷலிஸ்ட் கட்சியைச் சேர்ந்த திரு. ஸ்ரீ கண்டன் நாயர், இதற்கு முயற்சிகள் செய்து வருவதாகத் தெரிகிறது.

# யாலு நதி குண்டு வீச்சுக்கு மாஜி பிரிட்டிஷ் யுத்த மந்திரி கண்டனம்

## "மிகவும் கண்மூடித்தனமான செய்கை"

ஸ்ட்ரோட், ஜுலை 5—

யாலுநதி மின்சார நிலயங்கள்மீது குண்டு வீசியது, **"மிகவும் கண்மூடித்தனமான செய்கை"** என தொழிற்கட்சி சர்க்காரில் யுத்த மந்திரியாக இருந்த ஜான் ஸ்ட்ராச்சி கூறினார்.

"சீனர்களும், வட கொரியர்களும் ஒரு புதிய தாக்குதலைத் தொடங்கவில்லை. இந்த குறிப்பிட்ட தாக்குதல் நடத்தவேண்டுமென்ற எத்தகைய ராணுவ அவசியமும் இல்லை. யுத்தத்தை விஸ்தரிக்கும் தன்மையுடையது என உலகம் முழுவதுமே கருதும், இந்த நடவடிக்கையை எடுத்தது மிகவும் அபாயகரமானதாகும்" என அவர் குறிப்பிட்டார்.

இத்தகைய தாக்குதல்களை எதிர்த்து தொழிற் கட்சி மிகவும் பலமான ஆட்சேபத்தைத் தெரிவிக்க வேண்டும் என அவர் கூறினார்.

"கொரிய யுத்த நிறுத்தப் பேச்சுகளில் ஒரே ஒரு அம்சத்தைத் தவிர, இதர எல்லா அம்சங்களிலும் உடன்பாடு ஏற்பட்டுள்ளது இந்த அம்சத்திலும் உடன்பாடு ஏற்படும் சாத்தியம் இருக்கிறது" என ஜான் ஸ்ட்ராச்சி கூறினார்.

இத்தகைய தாக்குதல்கள் சீன-கொரிய தரப்பினரை பேச்சுவார்த்தைகளுக்கு ஒப்புக்கொள்ளும்படி நிர்ப்பந்திக்கும் என அமெரிக்காவில் சிலர் நினைக்கின்றனர். பிரிட்டிஷ் தொழிற் கட்சி மட்டுமல்ல, பிரிட்டிஷ் மக்கள் அனைவரும் இந்த அமெரிக்க அபிப்ராயத்திற்கு முற்றிலும் மாறான கருத்துக் கொண்டுள்ளார்கள் என அவர் தெரிவித்தார்.

## "நீதிநிலைமையை சீர்குலைக்க முயல்கிறார்கள்"

### எதிர்க்கட்சி மீது ராஜாஜியின் ஆத்திரம்

சென்னை, ஜுலை, 5—

ஆஸ்பத்திரிகளில் பணி செய்யும் நர்ஸுகளுக்கு பஞ்சப்படி குறைக்கப்பட்டது வாஸ்தவம் தானா என்று கம்யூனிஸ்ட் எம். எல். ஏ. ராமலிங்கம் இன்று அசெம்பிளியில் ஒரு கேள்வி கேட்டபோது, ராஜாஜிக்கு உடனே ஆத்திரம் பொங்கிக் கொண்டுவந்தது. "எதிர்க் கட்சியினர் சர்க்காரின் நிதி நிலைமையை சீர்குலைக்கப் பார்க்கிறார்கள். நாங்கள் அதை எப்படியும் தடுப்போம்" என்று ஒரு போடு போட்டார். "நிதி நிலைமையை சீர்குலைப்பது" என்பதற்கு என்ன அர்த்தம் என்று எதிர் கட்சித் தலைவர் டி. விஸ்வநாதம் கேட்டார். "சமயம் வரும்போது அதை விளக்குகிறேன்" என்று பிரதமர் பதில்கூறி உட்கார்ந்து விட்டார்.

## விடுதலை அடைந்த தோழர்களுக்கு வரவேற்பு

சத்திரப்பட்டி, ஜுலை 3—

இராமநாதபுரம் ஜில்லா சதி வழக்கில்சேர்க்கப்பட்டு 3 வருடங்களாக மதுரை சிறையில் இருந்த தோழர்கள் அலக்ராஜ், ஆறுமுகம், இருவரையும் நிரபராதிகள் என்று நீதிபதி அளித்த தீர்ப்பின் விளைவாக ஜுன் 30ந் தேதி விடுதலை செய்யப்பட்டனர். அவர்களுக்கு 2-7-52 மாலை 6 மணிக்கு தோழர் எ. எம். சாமி தலைமையில் சத்திரப்பட்டியில் ஒரு வரவேற்பு அளிக்கப்பட்டது.

வரவேற்புக் கூட்டத்தில் தோழர் அலக்ராஜ் செங்கொடி ஏற்றுவித்தார்.

நகர கம்யூனிஸ்ட் கட்சி, தி.மு.க., நெசவுத்தொழிலாளர் சம்மேளனம், முற்போக்கு சிறுவர் சங்கம், கலைமகள், நேரு, தண்டாயுதபாணி வாசகசாலைகள் ஆகிய ஸ்தாபனங்களின் சார்பில் விடுதலை பெற்ற தோழர்களுக்கு மாலைகள் அணிவிக்கப்பட்டன.

"நெசவுத்தொழிலாளிகளுக்கு மாதம் ரூ. 15. கிடைக்கும் திட்டத்தைத் தயாரித்து விட்டதாக கூறும் மந்திரிகள் மாதம் ரூ. 1,500 சம்பளம் பெறத் தயங்கவில்லை. இவர்கள் தான் எங்களைக் கொலைகாரர்கள் என்று கூறி சிறையிலே அடைத்து வைத்திருந்தார்கள்" தோழர் ஆறுமுகம் பேசியபோது, கூட்டத்தினர் கைகொட்டி ஆரவாரம் செய்தனர்.

பிறகு தோழர் சீனிவாசனும், அலக்ராஜுவும் பேசினர்.

## சர்வதேச அரங்கத்தில்

**செய்கோன், ஜுலை 3—**

இந்தோ-சீனாவில் பிரெஞ்சுக்காரர் வசமிருந்த டாய்டியன் என்னும் இடத்தை வியத்-மின் விடுதலைப் படையினர் திரும்பப் பிடித்து விட்டனர். இந்தோ-சீன தலைநகர் ஹனோயிக்கு 40 மைல் கிழக்கில் இந்த நகரம் இருக்கிறது.

**ஜாகர்தா, ஜுலை 5—**

டச்சு ஆதிக்கத்திலுள்ள ஜாவா தீவில், சுரபாயா நகரிலுள்ள ஒரு ராணுவச்சிறையில், சுமார் 1000 கைதிகளுக்கும், சிறை அதிகாரிகளுக்கும் இடையே பெரிய மோதுதல் ஏற்பட்டது. சுமார் 70 கைதிகள் தப்பியோடவும், இதர கைதிகளை விடுவிக்கவும் முயற்சி செய்ததாலேயே இந்த மோதுதல் ஏற்பட்டதாம். பலத்த ராணுவ, போலீஸ் அடக்குமுறையினால், கைதிகள் திரும்ப அறைகளுக்குள் தள்ளி பூட்டப்பட்டனர்.

**லண்டன், ஜுலை 4—**

பாஸிஸ்ட் பிராங்கோ ஸ்பெயினுக்கு ஆயுத உதவி அளிக்க—ஒரு சில ராணுவ தளவாடங்களை ஏற்றுமதி செய்ய—பிரிட்டிஷ் சர்க்கார் தீர்மானித்துள்ளது.

**லண்டன், ஜுலை 4—**

சுமார் 100 வருட காலமாக லண்டனில் இருந்துவந்த இரண்டடுக்கு ட்ராம்கள் ஒழிக்கப்பட்டு விட்டன. இனிமேல் இரண்டடுக்கு பஸ்கள் மாத்திரமே லண்டன் நகரத்தில் ஓடும்.

**கொழும்பு, ஜுலை 3—**

4,527 டன் இலங்கை ரப்பரையும், 2,300 டன் பாகிஸ்தான் பருத்தியையும் ஏற்றிக்கொண்டு "எட்ஜேஸ்" என்ற ஒரு போலந்து தேசக் கப்பல் கொழும்பு துறைமுகத்தைவிட்டு சீனாவிற்குப் புறப்பட்டது.

**டோக்யோ, ஜுன் 5—**

வேனிற்கால போனஸ் கோரி ஒரு லட்சத்து ஐம்பதாயிரம் ஜப்பானிய சுரங்கத் தொழிலாளர்கள் 24 மணிநேர வேலைநிறுத்தத்தை ஆரம்பித்துள்ளனர். தங்களுடைய கோரிக்கை நிறைவேறும் வரை ஒன்றுவிட்டு ஒருநாள் வேலைநிறுத்தம் செய்வதென்றும் தீர்மானித்துள்ளனர்.

## பாட்னாவில் பஞ்சம்!

பாட்னா, ஜுலை 5—

பாட்னாவில் சில பகுதிகளில் உணவுப் பஞ்சம் ஏற்பட்டு அதனால் சுமார் 8 லட்சம் மக்கள் பாதிக்கப்பட்டுள்ளனர் என்று ஜில்லா கலெக்டர் அறிவித்துள்ளார்.

★

## மேற்கு வல்லரசுகள்மீது அடெனர் குற்றச்சாட்டு

பாரிஸ், ஜுலை 4—

ஜெர்மனியின் எதிர்காலம் சம்பந்தமாக, பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா ஆகிய மூன்று வல்லரசுகளும் சோவியத் யூனியனுக்கு ஒரு குறிப்பு அனுப்ப ஏற்பாடுகள் செய்துகொண்டிருக்கின்றன.

இதுபற்றித் தன்னிடம் கலந்துகொள்ளாததை கண்டித்து மேற்கு ஜெர்மனி பிரதமர் கொன்ராட் அடெனர் மேற்கு வல்லரசுகளின்மீது கடுமையான குற்றம் சாட்டியிருக்கிறார்.

"வர்சேல்ஸ் ஒப்பந்தத்தின் போது செய்த மாதிரி ஜெர்மனி மீது ஆதிக்கம் செலுத்த விரும்புகிறீர்கள்" என்று அடெனர் பலமாகக் கண்டித்துப் பேசினார் என்று தெரிகிறது.

## நடக்கவிருப்பவை

ஜுலை 7-ம் தேதி மாலை 4-30 மணிக்கு சக்தி காரியாலயத்தில் (115-ஈ, மௌபிரீஸ் ரோடு, கோபாலபுரம்) அகில இந்திய முற்போக்கு எழுத்தாளர் சங்கப் பிரதிநிதி திரு. ராம்பிலாஸ் சர்மா தமிழ்நாடு முற்போக்கு எழுத்தாளர்களை சந்தித்துப் பேசுவார்.

## திருத்தம்

சென்னை 5-7-52 இதழில் 3-ம் பக்கத்தில் 3, 4 பத்திகளில் "'ஆந்திரபிரபா' தொழிலாளர் பிரச்சனையைக் கோர்ட்டுக்கு விடுக" என்ற தலைப்பை "'ஆந்திர பத்திரிகா' தொழிலாளர் பிரச்னையை விசாரணைக் கோர்டுக்கு விடுக!" என்று திருத்தி வாசிக்கவும்.

# புதிய வரி விதிப்புகளுக்கு சட்டசபையில் பலத்த எதிர்ப்பு

## காங்கிரஸ் ஆதரவாளர்களே கண்டிக்கின்றனர்

சென்னை, ஜூலை 4—

இன்று அசெம்பிளியில் பட்ஜெட் பற்றி பொது விவாதம் ஆரம்பித்தபோது, பல காங்கிரஸ் மெம்பர்கள், கிருஷிக் லோக் கட்சியினர் ஆகிய சர்க்கார் ஆதரவாளர்களும்கூட புதிய வரி விதிப்புகளை பலமாகக் கண்டித்துப் பேசினர்.

சர்க்கார் கைத்தரி நெசவுத் தொழிலாளர்களுக்கு ஏதோ கொடுக்க முன வந்திருக்கும் நிவாரணம் மிகவும் பற்றாக்குறை என்றும், ஏராளமான பேருக்கு அதனால் ஒரு பயனும் இல்லையென்றும் பிரகடா கோட்டய்யா (பிரஜா கட்சி) கூறினர்.

சர்க்காரை மிகவும் பலமாக ஆதரிக்கும் காங்கிரஸ், எம். எல். ஏ., ஆர். வி. சாமிநாதனே, நிலவரிக்கு விதிக்கப்படும் உபரி வரி, 4 அல்லது 5 ஏக்ரா வைத்துக் கொண்டுள்ள சிறிய விவசாயிகளையும் பாதிக்கும் என்றார்.

திரு. கே. வி. ராமேசம் (ரங்கா கட்சி), இந்த பட்ஜெட் சிந்தனையற்ற, தைரியமற்ற பட்ஜெட் என்று குறை கூறினர்.

ஹரிஜன க்ஷேமத்திற்காக என்று சர்க்கார் ஒதுக்கிய ஒரு கோடிரூபாய்எவ்வாறுசெலவழிக்கப்பட்டது; அதற்காக ஏற்படுத்தப்பட்ட கமிட்டி என்ன ஆயிற்று; என்பது யாருக்கும் இதுநாள் வரையில் தெரியவில்லையே என்று திரு. ஸ்வாமி ஸகஜானந்தா குற்றம் சாட்டினர், திரு.நாராயணகுரூப்,(பிரஜா)விவசாய வருமான வரியைக் கொண்டு வருவதற்கு பதிலாக நிலவரிக்கு உபரிவரி விதித்திருப்பதைக் கண்டித்தார்.

தோழர் ஹனுமந்தராவ் (கம்யூனிஸ்ட்) பேசுகையில், "அபிவிருத்தி வரியையும். பஸ் கட்டண வரியையும் கடுமையாக ஆட்சேபித்தார். சர்க்கார் மந்திரிகள். சர்க்கார் பணச் செலவில் காங்கிரஸ் தேர்தல் பிரசாரம் செய்ததைக் கண்டித்துப் பேசினர். காங்கிரஸ் காரியக் கமிட்டியே வாயால் பேசும் சில நிலச்சீர்திருத்த அம்சங்கள்கூட இந்த பட்ஜெட்டில் காணப்படாததை சுட்டிக் காட்டினர்.

சி. குன்னிராம குரூப் (பிரஜா) பேசுகையில், இந்த பட்ஜெட்டினல் மாகாணத்தின் எந்தப் பிரச்னைக்கும் பரிகாரம் தேடமுடியாது என்றார்.

எஸ். டி. ஆதித்தன் (பிரஜா) பேசுகையில், புதிய வரிப் பிரேரணைகள் சாதாரண மக்களை பெரிதும் பாதிக்கும் என்றார்.

# ராணிமுடி தேயிலைத்தோட்ட தொழிலாளர் போர் கோஷம்

## கோரிக்கை கொடுக்காவிடில் வேலை நிறுத்தம்

பாம்பனர், ஜூலை 1—

நேற்று ராணிமுடி தேயிலைத் தோட்டத் தொழிலாளர்களின் பொதுக்குழுக் கூட்டத்தில் "எஸ்டேட் முதலாளி இனியும் தங்களுடைய கோரிக்கைகளைக் கொடுக்க மறுத்தால் வேலை நிறுத்தம் செய்வதென" முடிவு செய்யப்பட்டது.

கூட்டத்திற்கு தோழர் அப்துல் வஹாப் தலைமை வகித்தார். தொழிலாளிகள் கோரிக்கைகளை சமர்ப்பித்து பல மாதங்களாகியும் நிர்வாகம் இதுவரை கொடுக்காமல் தட்டிக்கழிப்பதைக்கண்டு ஆத்திரம் கொண்டே தொழிலாளர்கள் இம் முடிவை செய்துள்ளனர். கோட்டையம் ஹாசன் ராவுத்தருக்குச் சொந்தமான இத் தோட்டத்தில் 200 தொழிலாளிகளுக்குமேல் வேலை பார்க்கின்றனர்.

தொழிலாளிகள் வீட்டு வசதி பிரசவ அலவன்ஸ். கம்பளி அலவன்ஸ், வழிக்காசு, சம்பளஉயர்வு பஞ்சப்படி, பிள்ளைப் பிறை, பள்ளிக்கூடம், கூடை இலவசமாக வழங்குதல், பழிவாங்கப்பட்டவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ளுதல் போன்ற கோரிக்கையை சமர்ப்பித்துள்ளனர்.

# தோழர் பி. சீனிவாச ராவ் சுற்றுப் பிரயாணம்

தமிழ்நாடு விவசாய சங்கப் பொதுக்காரியதரிசி தோழர் பி. சீனிவாச ராவ் ஜூலை 9 முதல் 19வரை இராமநாதபுரம் ஜில்லாவில் சுற்றுப்பிரயாணம் செய்ய திட்டமிடப்பட்டுள்ளது இராமநாதபுரம் ஜில்லா விவசாயிகள் சங்க காரியதரிசி தோழர் ஆதிமூலமும் உடன் செல்வார். மத்திய சங்கமும், ஜில்லா விவசாய சங்கமும் நன்கு இயங்குவதற்கு அந்தந்தப் பகுதி அங்கத்தினர்கள் கோட்டா தொகையை செலுத்த வேண்டுமெனவும் ஜில்லா விவசாய சங்கக் காரியதரிசி கோருகிறார். சுற்றுப் பிரயாண விவரம் பின் வருமாறு:

| | | |
|---|---|---|
| ஜூலை 9— | இராமநாதபுரம் | — மாலை பொதுக்கூட்டம் |
| " 10— | " | காலை தா.வி. சங்க ஊழியர்கள் கூட்டம். |
| " 10— | கீழப்பசலை | — மாலை ஜீவா வாசகசாலைத் திறப்புவிழா. |
| " 11— | திருப்பாச்சேரி | — காலை சிவகங்கை தாலூகா ஊழியர் கூட்டம் |
| " 11— | " | — மாலை பொதுக்கூட்டம் |
| " 12— | அருப்புக்கோட்டை | — பிற்பகல் அருப்புக்கோட்டை தாலூகா ஊழியர் பொதுக்கூட்டம் |
| " 12— | " | — மாலை பொதுக்கூட்டம் |
| " 13— | சிவகாசி | — பிற்பகல் சாத்தூர் தாலூகாஊழியர்கூட்டம் |
| " 13— | " | — மாலை பொதுக்கூட்டம் |
| " 14, 15— | வத்ராயிருப்பு | — ஊழியர் கூட்டம், பொதுக் கூட்டம், போராட்டம் நடந்த கிராமங்களுக்கு விஜயம். |
| " 16— | சேத்தூர் | — காலை ஊழியர் கூட்டம் |
| " 16— | " | — மாலை பொதுக்கூட்டம் |
| " 17— | | ஓய்வு. |
| " 18, 19 | | திருப்பத்தூர் தாலூகா ஊழியர் கூட்டம் சிருங்காக்கோட்டை, கண்டரமாணிக்கம் முதலிய போராட்ட ஸ்தலங்களுக்கு விஜயம். |

## பொள்ளாச்சி சந்தையில் அரிசி மூட்டைக்கு ரூ. 5 விலை உயர்வு

பொள்ளாச்சி ஜூலை 4—

பொள்ளாச்சி வாரச் சந்தையில் அரிசி மூட்டை விலையில் ரூ. 5 உயர்ந்துள்ளது.

சென்ற வாரத்தில் 3,000 மூட்டை அரிசி, மதராஸ் படிக்கு 0-14-0 முதல் ரூ. 1-0-0 வரை விற்கப்பட்டது. இவ்வாரம் 1,500 மூட்டை புழுங்கல் அரிசி படி ரூ. 1 முதல் ரூ. 1-2-0 வரை விற்பனைக்கு வந்துள்ளது. 1,500 மூட்டை சோளமும், 300 மூட்டை ராகியும் வந்துள்ளது. சோளத்தின் விலை ரூபாயுக்கு $1\frac{1}{2}$ படி; ராகி ரூபாயுக்கு $1\frac{3}{4}$ படி.

# பக்தவத்சலு நாயுடு தீர்ப்பை அமுலாக்கு!

## தோழர் நாகு அறிக்கை

புதுக்கோட்டை, ஜூலை 2—

தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ் நிர்வாக உறுப்பினர் தோழர் வி. நாகு கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்துள்ளார்:—

"புதுக்கோட்டை ராஜாமணி டிரான்ஸ்போர்ட் கம்பெனித் தொழிலாளிகள் இடைவிடாது கிளர்ச்சி செய்ததின் பயனாக மதுரை தொழில் நீதிமன்றத்தின் நீதிபதி திரு. பக்தவத்சலு நாயுடுவின் தீர்ப்பு கிடைத்தது. அதன்மூலம் தொழிலாளிகளுக்கு சம்பள உயர்வு முதலிய சலுகைகள் கிடைத்தன. நிர்வாகம் அந்த தீர்ப்பை எதிர்த்து நான்கு கோர்ட்டுகளுக்கு அப்பீல் செய்தும் பக்தவத்சலு நாயுடுவின் தீர்ப்பு ஊர்ஜிதமாக்கப்பட்டது.

ஆயினும், நிர்வாகம் தீர்ப்புத் தொகை அதாவது சுமார் ரூ. 30,000-ஐ பூராவும் பட்டுவாடா செய்வதற்குப் பதிலாக 4-ல் 1 பங்கைத்தான் கொடுத்துள்ளது. தொழிலாளிகள் பூராத் தொகையையும் கோருகின்றனர். நிர்வாகம் பூராத் தொகையையும் பெற்றுக் கொண்டதாக கையெழுத்து போடும்படி தொழிலாளிகளை நிர்பந்திக்கிறது.

இதற்கு ஒப்புக்கொள்ளாத குற்றத்திற்காக சங்கச் செயலாளர் தோழர் சுந்தரேசன் உட்பட 11 முக்கிய ஊழியர்களை நிர்வாகம் வேலையிலிருந்து நீக்கியுள்ளது.

மேலும் கோர்ட் தீர்ப்பையும் மீறி கிரேடுகளைக் குறைக்கின்றனர். உதாரணமாக முதல் கிரேட் எலக்ட்ரீஷியனின் ஊதியத்தை ரூ. 95-லிருந்து ரூ. 75 ஆக குறைத்துள்ளனர்.

இது தவிர நிர்வாகம் சதி செய்து ஆட்குறைப்பின் பெயரால் பிந்திய சர்வீஸ்காரர்களை அதிலும் தனக்கு சாதகமானவர்களை வைத்துக்கொண்டு மூன்று வருடம் முதல் ஐந்து வருடம் வரை சர்வீஸ் உள்ள திறமையானவர்களை நிர்வாகம் நீக்குகின்றது, தீர்ப்பு அமுல் நடத்த வேண்டுமென்று தீவிரமாக பாடுபட்ட இவர்களை நீக்கிவிட்டால் தன்னிஷ்டம்போல் காட்டு ராஜா தர்பார் நடத்தலாம என்று நிர்வாகம் முயற்சிக்கிறது.

ஆகவே, இவ்விஷயத்தில் சர்க்கார் உடனடியாக தலையிட்டு தீர்ப்பை நிர்வாகம் அமுல் நடத்தும்படி செய்வதுடன், நீக்கப்பட்ட தொழிலாளிகளுக்கு நஷ்டஈடு கொடுத்து அவர்களை திரும்பவும் எடுத்துக் கொள்ளும்படி சர்க்கார் நிர்ப்பந்திக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

## அநாவசியமாக போலீஸ் தாக்குதல்



சென்னை; ஜூன் 28—

சிந்தாதிரிப்பேட்டை, முகம்மது உஸ்மான் தெரு 3ம் நெம்பர் வீட்டில் குடியிருக்கும், தே. துரைராஜ் என்ற இளைஞர் ஜூன் 12ம் தேதி இரவு 8 மணிக்கு சாப்பிட்டுவிட்டு வெளியே வந்த நேரத்தில், எப். 1. போலீஸ் ஸ்டேஷனைச் சேர்ந்த ஹெட்கான்ஸ்டேபிள் அப்பாஸ் (1260), பிச்சை (226), மணி (657) என்ற இரு கான்ஸ்டேபிள்களும் சேர்ந்து, எவ்விதகாரணமுமின்றி, நின்று கொண்டிருந்த இளைஞனைக் கன்னத்தில் அறைந்து,ஸ்டேஷனுக்கு இழுத்துக் கொண்டுபோய் அன்றிரவு லாக்கப்பில் வைத்து லாட்டியால் அடித்து இடதுகையில் பலத்த காயத்தை ஏற்படுத்தியுள்ளார்.

ஜெனரல் ஆஸ்பத்திரியில் சென்று கையில் கட்டு கட்டியுள்ளதை படத்தில் பாருங்கள். அவர்கள் மீது கேஸ் போட்டிருக்கிறார் என்று தெரிகிறது. மேற்படி 3 கான்ஸ்டேபிள்களும் அந்த இளைஞன் வீட்டிற்கு அடிக்கடி சென்று பயமுறுத்துவதாகவும் தெரிகிறது.

அக்கிரமமாக போலீஸ் நடந்து கொள்வதை தன் கவனத்திற்குக் கொண்டுவந்தால் அதுபற்றி கவனிப்பதாக சட்டசபையில் கூறும் ஆச்சாரியார் இதில் என்ன செய்யப்போகிறார்? (ந.கி.)

# சேலம் சிறையிலே ரகுநாதனின் ஹிட்லர் தர்பார்

சேலம், ஜூன் 30—

28-6-52 நடுப்பகல் 2 மணிக்கு சேலம் மத்ய சிறை முதல் வகுப்பில் உள்ள கம்யூனிஸ்ட் தோழரான நாராயண நம்பியார் கக்கூஸுக்கு போகும் பொழுது ரகுநாதன வழி மறித்து நிறுத்தி, விரட்டி, "மரியாதையாக நடக்கவில்லையேல் உதைப்பேன்" என்றும் "திருட்டுத் தேவடியாள் மகனே" என்றும் சாககடை பாஷையில் "பஜகோவிந்தம்" பாடினராம். அதனபின் தோழர் நம்பியாருக்கும், ஞானசம்பந்தத்திற்கும் காலில் விலங்கு மாட்டிலாக்கப் செய்தாராம்.

இதை எதிர்த்துமுதல்வகுப்பு, 6. அனெக்ஸிலுள்ள கம்யூனிஸ்ட்டுகள் உண்ணாவிரதம் ஆரம்பித்தனர்.

சிறையிலாகா மந்திரி வந்தபோது "நடத்தும் முறையில் மாறுதல் ஏற்படும் என்று சொன்னார். ஆனால் "இதுதான் அந்த மாறுதல் போலுள்ளது" என தெரிகிறது.

## விவசாயப் பொதுக்கூட்டம்

கனியூர், ஜூலை 1—

ஜூன் 28 மாலை கனியூர் விவசாய சங்கப் பொதுக்கூட்டம் வேலூர் தோழர் துரைசாமி தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் வேலுசாமி, வெங்கட்ராம், ராமசாமி, ரமணி ஆகியோர் உணர்ச்சிமிக்க பிரசங்கம் செய்தனர். 3000 பேர் கூட்டத்திற்கு வந்திருந்தனர்.

ஆசிரி... ஜனசக்... சென்னை...

## மூட நம்பிக்கைகள்

ஐயா,

2-7-52ல் காவேரிப் பட்டணத்திற்கடுத்த தட்டராப்பள்ளி கிராமத்தில் எக்கிட (குடும்பர்) சாதியில் ஊர் கவுண்டர் வீட்டில் ஒரு வஸ்திரம் காணமற் போய் விட்டது. பக்கத்து இரளில் வீட்டில் வசித்த ஒரு அனுதையைப் பிடித்துக் கொண்டுபோய், சத்தியம் பிடிப்பதாகச் சொல்லி அவனது இரு கைகள் நிறைய கற்பூரம் வைத்துகொளு... கைகளும் வெந்து... போய்விட்டது. அவ... து காவேரி பட்டணம் ... ஆஸ்பத்திரியில் சர்க்கார் ...ணையில் இருக்கிறன். இ... போலீசார் விசாரித்து எழுதி... கொண்டு போயிருக்கிறார்கள்.

இந்த மூடநம்பிக்கைகளிலிருந்து மக்களை விடுவிக்கும் போராட்டத்துக்கு "ஜனசக்தி" ஆதரவு அளிக்குமாக!

காவேரிப்பட்டணம் உயர்நிலைப் பள்ளி மாணவர்கள்

## சர்க்காரின் இரக்கமற்ற கொள்கை

ஐயா,

கனம் ராஜாஜியின் மதுவிலக்கு திட்டத்தினல் நம் மாகாணத்தில் ஒரு லட்சம் மதுமரத் தொழிலாளர்களின் குடும்பங்கள் பட்டினியின் காரணமாக தெருவில் பிச்சை எடுப்பதும், காட்டில் கிடைக்கும் கோரைக் கிழங்குகளை காட்டு விலங்குகளைப் போல் தோண்டி எடுத்துக்கொண்டு வந்து பக்குவம் செய்து கூழாக சமைத்துசாப்பிடுவதும்போன்ற நிலைமையை சர்க்கார் உணராமல் இருப்பது வருந்தத்தக்க விஷயம். இந்த தொழிலாளர்களின் நிலை உடனடியாக சீர்படவேண்டுமாயின் (பொள்ளாச்சி, ஈரோடு) முதலிய இடங்களில் தென்னைக்கு லைசென்சு கொடுத்ததுபோல் உடனடியாக கொடுத்தாக வேண்டு[ம்] இல்லையேல் இந்தமாகாணத்தி[ல்] உள்ள ஒரு லட்சம் மதுமர தொழிலாளர்களின் வாழ்க்... மிகவும் அபாயமாய் இருக்கி... என்பதை சர்க்காருக்கு எச்ச... கிறேன். மதுமரத் தொழிலா... குடும்பங்களில் இனி பட்டினிய... ஒரு உயிருக்காவது பங்கம் ... படுமேயானல் அதற்கு சர்க்க... ஜவாப்தாரியாக வேண்டும் ... பதை மறுமுறையும் எச்ச... கிறேன்.

பழனி 2-7-52 } இப்படிக்கு எல். லக்ஷ்மியவீர...

தமிழ்நாடு மதுமரத் தொழி... சங்க காரியத...

## விலைகள் உயருகின்ற...

தோழரே!

உணவு பங்கீடு முறை... னது முதல் நெல் 48 படி... டது 17 ரூ. முதல் 20 ரூ... யிலும் சோளம் 20 முத... வரையிலும் விற்று ... இந்தவிலை தேனி மார்க்கெட்... அனுசரித்து ஏறியும் இறங்... ஒரு நிலையில் இல்லாமல் ... கொண்டே வந்தது. ஆ... கடந்த சில தினங்களாக ... வாசிகள் ஒரேயடியாய் ஏ... மாய் இருக்கிறது. சோள... படி கொண்ட மூட்டை ... ஆகவும் நெல் 25 ரூ. ... ன்று வருகிறது.

சென்னை மாகாணத்தில் ... கம்பம் பள்ளத் தாக்குகளில் ... ஏலம், காப்பி சாகுபடி அ... ஏலம், காப்பி தோட்டங்களு... மாதா மாதம் குறிப்பிட்ட ... ளில் பெர்மிட் மூலம் உண... பொருள் கொண்டு போ... வழக்கம். பெர்மிட்டுக... தேவையான உணவுப் பொ... கள் முன்பு அரசாங்கத்தி... தே கிடைத்து வந்தது. ... மாதம் 300 மூட்டை அ... 500 மூட்டை மில்லட்டும் ... படுகிறது.

தங்கள் தேவையைப் பூ... செய்துகொள்வதற்கு விவ... கள் பகிரங்க மார்க்கட்... போகவேண்டிய நிர்பந்த... பொழுது ஏற்பட்டிருக்கிற... காலத்தில் விவசாயிகள் பெ... டிற்கு அரிசி, நவதானியம் ... கப போகும் பொழுது ... பொழுது இருக்கும் விலை... காட்டிலும் நிச்சயமாக உ... என்று எதிர்பார்க்கப்படுகி...

போடி 30-6-52 } எஸ். நாராயண... காரியதரி...

## …பிக்கையிருந்தால் …போலீஸ் எதற்கு?

### …தோழர் வி.ஜி. ராவ் சவால்!

### …வரி விதிப்புகள் பொதுமக்களையே பெரிதும் பாதிக்கும்

சென்னை, ஜூலை 4—

இன்று சென்னை மேல் சபையில் (லெஜிஸ்லேடிவ் கௌன்சில்) பட்ஜெட்டைப் பற்றி நடந்த விவாதத்தின் போது, சர்க்காரின் புதிய வரித்திட்டங்கள் சாதாரண பொதுமக்களைத்தான் பாதிக்கும் என்று தோழர் வி. ஜி. ராவ் (பார்-அட்-லா) கூறினர்,

தோழர் வி.ஜி. ராவ், "இந்த பட்ஜெட்டில் புதிதாக ஒன்று மில்லை; ஆயினும் பிரிட்டிஷ் காலத்தில் இருந்த பட்ஜெட்டுகளைக் காட்டிலும் இது மோசம்" என்று கூறிவிட்டு சேமிப்பு நிதி அனேகமாகபூராவும் செலவழிந்து விட்டது என்று நிதி மந்திரி கூறியதை பலமாகக் கண்டித்தார். "அவசர, நெருக்கடியான காலங்களை சமாளிக்க சேமிப்பு நிதி மிகவும் அவசியம்" என்றார்.

"வருஷ ஆரம்பத்தில் தங்கள் கையில் 14½ கோடி ரூபாய் இருந்ததாக நிதி மந்திரி சுப்ரமணியம் கூறுகிறார். ஆனால் இடைக்கால பட்ஜெட் சமர்ப்பிக்கும்போது, ரூ. 19·4 கோடி இருப்பதாக அப்பொழுதிருந்த மந்திரி ஏ. பி. ஷெட்டி கூறியுள்ளார்" என்பதை தோழர் வி.ஜி. ராவ் ஞாபகமூட்டி இந்த வித்தியாசம் எப்படி வந்தது என்று நிதி மந்திரியை கேட்டார்.

…பஸ் கட்டண விகிதங்களுக்கு …ரி விதித்திருப்பது சாதாரண …ங்களை பெரிதும் பாதிக்கு…ன்று கூறினர். எந்த அடிப்…டையில் வரிவிதிக்கவேண்டு…ன்பதைப் பற்றி வி. ஜி. ராவ் …கையில் "யாரால் தாங்க…புமோ, அவர்கள் மீதுதான் … வரிகளை விதிக்கவேண்டும். …ல் காங்கிரஸ் சர்க்கார் கை…காசில்லாத சாதாரண மக்க… மீது புதிய வரிகளை விதித்…து" என்றார்.

…லவரியின் மீது விதிக்கப்…ள்ள உபரிவரி ஏழை விவ…களை அதிகம் பாதிக்கும். …ர்யிகளின் நில பாத்யதை … உத்திரவாதம் செய்யப்…டால், இந்த வரி விதிப்…ரணமாக விவசாயிகள் …ரிலிருந்து மிராசுதார்க… வெளியேற்றப்படுவது நிச்…ண்ணுர்.

…டார் கார் போன்ற …பொருள்களின் மீது …ரி அதிகம் விதிக்க…று சர்க்காருக்கு யோசனை கூறினர். விற்பனை வரி வசூலிப்பதில், சாதாரண வியாபாரிகள் அதிகாரிகளால் பெரிதும் தொந்திரவுகளுக்குள்ளாக்கப்படுவதைத் தடுக்க, வியாபாரிகளின் கமிட்டிகளை ஏற்படுத்தி, அவைகளின் ஆலோசனையை சர்க்கார் பெறவேண்டுமென்றார்.

சர்க்காரின் மதுவிலக்குத் திட்டம் ஒரு பெரிய தோல்வியடைந்து விட்டது என்று வி.ஜி. ராவ் குறிப்பிட்டு, மதுவிலக்குச் சட்டத்தை வாபஸ்வாங்க வேண்டும் என்றார். மதுவிலக்கு திட்டமே தோல்வியடைந்து விட்ட பிறகு, அதனால் சர்க்கார் எதற்காக, ரூ. 15கோடி வருமானத்தை நஷ்டமடையும்படி விட வேண்டும் என்றார்.

சுகாதாரத்திற்காக, மிகக் குறைந்த தொகையே பட்ஜெட்டில் ஒதுக்கப்பட்டிருப்பதையும், போலீஸ் இலாகாவுக்கு அதிக தொகை ஒதுக்கப்பட்டிருப்பதையும் கண்டித்தார்.

கோவையில் ஒரு தொழிலாளியை சட்டவிரோதமாக போலீஸ் ஸ்டேஷனில் அடைத்துவைத்து, அவரை நையப்புடைத்த 2 சப் இன்ஸ்பெக்டர்கள் மீது போடப்பட்ட வழக்கு ஹைகோர்ட்வரையிலும் வந்தும், சர்க்கார் அந்த போலீஸ் அதிகாரிகளின் மீது சர்க்கார் நடவடிக்கை எடுத்துக் கொள்ளாததை தோழர் வி. ஜி. ராவ், குறிப்பிட்டுக் காட்டினர். (அந்த இரு போலீஸ் சப் இன்ஸ்பெக்டர்கள் சுப்ரீம் கோர்ட்டுக்கு அப்பீல் செய்து கொண்டிருப்பதாகத் தெரிகிறது).

இறுதியாக, தோழர் வி. ஜி. ராவ், "ராஜாஜிக்கு கடவுளிடத்தில் அவ்வளவு நம்பிக்கை இருக்குமானல், அவர் எதற்காக இவ்வளவு போலீஸை வைத்துக் கொண்டிருக்க வேண்டும். எல்லா இலாக்காக்களையும் ரத்து செய்துவிட்டு, கடவுள் இலாகா ஒன்றை மட்டும் வைத்துக் கொள்ளலாமே" என்றார்.

## விவசாயிகள் பொதுக்கூட்டம்

சிங்கை, ஜூலை 2—

30-6-52ல் பாப்பாங்குளத்தில் முப்பிடாதி அம்மன்கோவில்முன் தோழர் எம். கே. சாமி தலைமையில் இரவு 7 மணிக்கு விவசாயிகள் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

அதில் தோழர்கள் எம். கே. சாமி, இ. ?ளவாய் இருவர்களும் ஜனவிரோத காங்கிரஸ் மந்திரிசபையால் ஜனங்களுக்கு ஏற்படும் கஷ்டங்களைப் பற்றியும் மக்களுடைய செல்வாக்கை இழந்த ராஜகோபாலாச்சாரியார் மந்திரிசபை உடனே ராஜினமா செய்யவேண்டுமென்றும் ஐக்கிய ஜனநாயக முன்னணி மந்திரி சபையால்தான் ஜனங்களுடைய குறைகளை போக்க முடியுமென்றும் விவசாயிகளுடைய கஷ்டங்களைபோக்க விவசாய சங்கம் அவசியமென்றும் பேசினர்கள்.

## தானிய விலை உயர்வு

சத்திரப்பட்டியில் ரேஷன் எடுப்பதற்கு முன் விலை படி 1க்கு சம்பா அரிசி 0-12-9. ரேஷன் எடுத்தபின் இப்பொழுது 0-14-6. நல்ல சோளம் படி 0-9-6. (இதுவும் கிடைப்பதில்லை.)

### சிவகிரி

கன்ட்ரோல் நீக்கத்திற்கு முன் ஒரு கோட்டை நெல் ரூ. 28, 30 ஆக இருந்தது. கன்ட்ரோல் நீக்கிய பின் இப்பொழுது (28-6-52ல்) விலை ரூ. 46, 48 ஆக உயர்ந்து விட்டது.

### டாலர் நாட்டிலே

## 200 கொரிய மக்களை சுட்டுக்கொன்றனர்

மனித சமுதாய நன்மையை நாடுபவர்களாகவும், உலக சமாதானத்தை விரும்புவர்களாகவும் நடித்து உலக மக்களை நம்பவைக்க விரும்பும் டாலர் அதிகார வர்க்கத்தின் படைகள் கொரியாவில் நடத்திவரும் அட்டூழியங்களைப் பற்றி, பிரிட்டிஷ் படையைச் சேர்ந்த ஒரு சிப்பாய் கொடுத்த வாக்குமூலத்தைப் படியுங்கள்.

"திடச்சித்தமில்லாத, சிற்றின்ப மோகங்கொண்டலையும் தமாஷ் பிரியர்கள் அமெரிக்க சிப்பாய்கள் என்பது பிரிட்டிஷ் மக்களுக்கு நன்கு தெரியும். நான நேரில் கண்டு உணர்ந்த இந்த பயங்கர செய்கைகளை, நாஜிகள் கூட வெட்கமுறும் கொடுமைகளை டாலர் சிப்பாய்கள் புரிந்தார்கள் என்று சொல்வதைக் கேட்டால் எனது பிரிட்டிஷ் மக்களுக்குக் கூட குலைநடுக்கமேற்படும். அமெரிக்க சிப்பாய்களைப்பற்றிய இந்த அனுபவம் எனக்குப் புதில்ல. பாரசிகத்திலும், இத்தாலியிலும் அவர்களுடன் நான் இருந்திருக்கிறேன். அங்கு அவர்கள் கற்பழிக்கும் செயலில் சர்வ சாதாரணமாக ஈடுபடுவார்கள்.

1950 நவம்பர் 19ல் நான் கொரியா வந்தேன். அங்கு நான் கண்ட அமெரிக்க சிப்பாய், குடி, கூத்தி, கானம் இவற்றிலேயே நாட்டங்கொண்டிருந்தான். ஒரு நாளிரவு நான் வெளியே போய் விட்டு வரும்பொழுது ஒரு துப்பாக்கி வேட்டு கேட்டது; அந்த இடத்திற்கு ஓடிப் பார்த்தேன. ஒரு அமரிக்க சிப்பாய் அங்கிருந்து ஓட்டம் பிடித்தான். தரையில் ஒரு இளம் பெண் விழுந்து கிடக்கக் கண்டேன். அவளை நிர்வாணமாக்கி, கற்பழித்து சுட்டுத்தள்ளி விட்டு அந்த சிப்பாய் ஓடுகிறான் என்பது நன்கு புரிந்தது. இதை நிறுத்த எந்த அமெரிக்க அதிகாரியும் சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லை.

அங்கிருந்து சுவான் என்ற இடத்துக்குப் புறப்பட்டபோது என இருதய பாரம் கொஞ்சம் குறைந்தது. இடையில் ஒருசிறு கிராமத்தில் ஒரு சிறு வீட்டிற்குள் தண்ணீர் குடிக்க நுழைந்தோம். சுவானிலிருந்து இது 30 மைல். 1950 நவம்பரில் இது நடந்தது. வீட்டிற்குள் ரத்தம் பெருகியிருந்தது. உள்ளே பார்த்தால் கொரியப் பெண்களும் குழந்தைகளும் விழுந்து கிடந்தனர். பெண்கள் அனைவரும் நிர்வாணமாகக் கிடந்தனர். அவர்களை யெல்லாம் கற்பழித்திருக்கின்றனர். வீட்டைச் சுற்றி அமெரிக்க உணவு டின்கள் எறியப்பட்டிருந்தன. அமெரிக்க சிப்பாய்கள் இங்கு வந்து இந்தக் கொடுமை புரிந்து விட்டுச் சென்றனர் என்று அந்த கிராம மக்கள் அழுது கூறினர். இதை அமெரிக்க தலைமைக் காரியாலயத்துக்கு அறிவித்தோம்.

இந்த பரிதாப காட்சியை விட்டகன்று சியோல் நகரையடைந்தோம். எல்லையில் பெருந் திரள் கூடியிருந்தது. இட்டப்போய்ப் பார்த்தோம். 200 கொரிய பிரஜைகள் தோண்டிய புதிய சவக்குழிகள் இருந்தன. அவர்கள் வரிசையாக நிறுத்தப்பட்டு யந்திர துப்பாக்கிகளால் அமெரிக்க சிப்பாய்கள் சுட்டுத் தள்ளுவதை பார்த்து அசைவற்று நின்றோம். 200 சவங்களையும் குழிக்குள் தள்ளினர் அமெரிக்க சிப்பாய்கள். அங்கு பல குகைகளைக் கண்டோம் அவற்றிலெல்லாம் கொரிய சிப்பாய்களும் பிரஜைகளின் பிரேதங்கள் குவிந்து கிடக்கக் கண்டோம். கர்ப்பிணிகளின் வயிறுகள் பயனெட்டுகளால் குத்திக் கிழிக்கப்பட்டிருந்ததைக் கண்டோம். இந்தப் பிரதேசம் அமெரிக்கப் படையின் கீழ் இருந்தது. 1951 ஜனவரி 6ல் துப்பாக்கிப் பிரயோகம் நடந்திருக்கிறது. அதே நாளில்தான் அங்கு குகைகளில் அந்தக் காட்சிகளைக் கண்டோம்.

நான் 2-வது உலக யுத்தத்தில் போரிட்ட வீரன். ராணுவத்திலிருந்து விலகிச் சென்ற பின், மீண்டும் ராணுவ சேவைக்கு அழைக்கப்பட்டு, கொரியாவுக்கு என்னை அனுப்பினர்கள். நான மணமுடித்து, ஒரு வேலையும் கிடைத்து சந்தோஷமாக இல்லறம் நடத்திக் கொண்டிருந்தேன். நான் கொரியா வர விரும்பவில்லை. இன்று கொரியாவில் நடந்ததைக் கண்ணுற்றதும், இங்கு நடக்கும் யுத்தம் அநீதியானது, அநாவசியமானது என உணர்ந்தேன். என்னை ஏன் நிர்ப்பந்தித்து இங்கு அனுப்பினர்கள் என்பதை அறிந்துகொள்ளத் தவறிவிட்டேன். என்னை வெட்கமும், துக்கமும் பீடித்து வாட்டுகிறது.

அமெரிக்க கொலைக்காரர்களோடு, பிரிட்டிஷ் துருப்புகளையும், இதர ஐ. நா. துருப்புகளையும் சேர்த்தே கணக்குப் போடுவார்கள் மக்கள் என்பது எனக்குத் தெரியும். ஆதலால் பிரிட்டிஷ் மக்களும், இதர மேற்கு நாட்டு மக்களும், கொரியாவில் நடக்கும் டாலர் அக்கிரமங்களுக்கு உடந்தையல்ல வென்பதை உலகமறியப் பகிரங்கப்படுத்த வேண்டுமென்பது என ஆவல்" என்று கூறியுள்ளார்.

டாலர் பேய்களின் கொடுஞ் செயலைக் கேட்பவர்கள் ரத்தம் கொதிக்காமலிருக்க முடியுமா?

### மைசூர் சட்டசபை முன்பு

## வாடகைக் கார் டிரைவர்கள் ஆர்ப்பாட்டம்

### போலீஸ் அட்டூழியத்தை தடுக்க கோரிக்கை

பங்களூர், ஜூன் 28—

நேற்று சட்டசபை நடந்து கொண்டிருக்கும்போது சுமார் 250-க்கு மேற்பட்ட வாடகை மோட்டார் கார்களையும், மோட்டார் ரிக்ஷாவையும் ஓட்டிக்கொண்டு டிரைவர்கள் சபை முன்பு பெருத்த ஆர்ப்பாட்டம் செய்தனர். போலீஸ் மந்திரி திரு. சித்தவீரப்பாவைக் பேட்டிக்கண்டு டிரைவர் ஜனுப் பாஷாவை போலீஸ் ஸ்டேஷனுக்கு அழைத்துச் சென்று அடித்து கையிலிருந்து பணத்தைப் பிடுங்கிய அதிகாரிகள் மீது நடவடிக்கை எடுக்கவேண்டுமென்றுகோரினர். தோழர் கே. எஸ். வாசன் எம். எல். ஏ.யும் பேச்சுவார்த்தையில் கலந்து கொண்டார்.

மோட்டார் ரிக்ஷாக்களும், வாடகைக் கார்களும், "போலீஸ் அட்டூழியம் ஒழிக!" "தொழிலாளிகளை இம்சிக்காதே", "பாரபட்சமற்ற நடவடிக்கை எடு" என்ற கோஷங்களைக் கொண்ட அட்டைகளை தாங்கி ஊர்வலமாகச் சென்றன. இவ்வூர்வலம் மோட்டார் டிரைவர்கள் தொழிலாளர்கள் சங்கத்தின் சார்பில் போலீசார் தொழிலாளர்களை இம்சிப்பதை எதிர்ப்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்டது.

25-6-52ல் போலீஸ் சார்ஜண்ட் வேணுகோபால் வாடகைக்கார் டிரைவர் ஜனுப் பாஷாவை ஏன் யூனிபாரம் அணியவில்லை என்று கேட்டார். ரம்ஜான் பண்டிகைக்கு இரண்டு நாள் அனுமதி வாங்கியிருப்பதாகக் கூறியும் கேட்காமல் வேணுகோபாலும், போலீஸ்காரர் நாயர் என்பவரும் மீத்திய போக்குவரத்து போலீஸ் ஸ்டேஷனுக்கு அவரை அழைத்து, சென்று பலமாக அடித்துச் அவர் கையிலிருந்த ரூ. 39-13-0 ஐயும் பிடுங்கிக்கொண்டு, 3 மணி நேரம் கொட்டடியில் வைத்திருந்து விட்டு வெளியே விட்டு விட்டனர்.

இது ஒரு சம்பவமல்ல. இம்மாதிரி சம்பவங்கள் நடப்பது சகஜமாய்விட்டன. போலீசார் தொழிலாளர்களிடம் கட்டாயப்படுத்தி லஞ்சம் வசூல் செய்கின்றனர்.

இவைகளை எதிர்த்தே இந்த ஆர்ப்பாட்டம் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. தோழர் கே. எஸ். வாசன எம்.எல்.ஏ. பிரதிநிதிகளை கூட்டிக்கொண்டு சென்று மந்திரியிடம் விஷயத்தை சொன்னர். மந்திரி ஆவன செய்வதாக வாக்களித்தார்,

அதன் பின்னர் எல்லாத் தொழிலாளர்களும் கப்பன பார்க்கிற்குச் சென்று பொதுக் கூட்டம் நடத்தினர். தொழிற் சங்கத் தலைவர்களான தோழர்கள் மரியதாஸ், எம். சி. நரசிம்மன், எம். எஸ். கிருஷ்ணன் முதலியோர் சொற்பொழி வாற்றினர். சங்கச் செயலாளர். தோழர் பி. ஆர். மாதவராவ் தொழிலாளர்கள ஒற்றுமையாக போராடவேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

## …பில் நாங்கள் …கொள்ளாததேன்

### …ண்டு ரங்கா …பினர் விளக்கம்.

சென்னை, ஜூலை 4—

…ண்டரீகாக்ஷாச்சாரி, … வி. ராமேசம், என்ற …லாக் கட்சியைச்சேர்ந்த …எம். எல்,ஏக்கள், சட்ட…ல் ராஜாஜியின் நம்பிக்…பிரேரணையின் மீது ஓட்…தபோது, தாங்கள் ஏன் … கலந்து கொள்ளவில்லை …தப் பற்றி ஒரு அறிக்கை …ள்ளனர்.

… 3-ந்தேதி நடைபெற்ற …லாக் கட்சிக் கூட்டத்தி… ஜாஜியின் பிரேரணைக் …மாக ஓட்டளிக்கக்கூடா… எங்கள் ஆட்சேபணை …ரிவித்திருந்தோம். இரு…ாக்கட்சி நடுநிலைமைதான …வேண்டுமென்று கூறி …னநாயகக் கட்சிகளின் …பைக் கொண்ட, …அடிப்படையில் ஒரு …மந்திரிசபை வேண்டும்" …வற்புறுத்த வேண்டும் … நாங்கள் கூறினோம்.

… எங்களின் அந்தக் …க்கு ஏற்ற முறையி… நாங்கள "நம்பிக்கை" … பற்றிய ஓட்டளிப்பில் …காள்ளவில்லை."

## சொன்ன வார்த்தையைக் காப்பாற்றுவது தான் நேர்மை

### வெற்றியடைந்த எம்.எல்.ஏ.க்கு பாராட்டுகூட்டம்

கோயில்பட்டி, ஜூலை 1—

மக்கள் சபைக்கு அருப்புக் கோட்டை தொகுதியிலிருந்து சமீப உப தேர்தலில் காங்கிரஸ் அபேட்சகரைத் தோற்கடித்து, வெற்றியடைந்த திரு. எம். டி. ராமசாமியைப் பாராட்டும் பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. ஆரம்பத்தில் பெரிய தோர் ஊர்வலமும் நடைபெற்றது.

முன்னாள் காங்கிரஸ்வாதியும் தற்போது காங்கிரஸின் ஊழலையும், பிற்போக்கையும் உதறித் தள்ளிய பெருமாள் ரெட்டியார் (பிரஜாகட்சி) தலைமை வகித்தார். தோழர் ஏ. ஆர். பெருமாள் (பார்வர்டு பிளாக்) பேசுகையில் இந்தத் தொகுதியில் ராஜாஜி வந்துசொன்ன வார்த்தையை அவர் காப்பாற்றவில்லை. அவர் மீது நம்பிக்கையில்லையென்று மக்கள் தீர்ப்பளித்து விட்டனர். ஆனல், அதை மதிக்காது சட்டசபை மெம்பர்களின் நம்பிக்கையைப் பெறும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார். சொன்ன சொலபடி ராஜினமா செய்வதன்றோ நேர்மை" என்றார்.

பிறகு, எம். டி. ராமசாமி, எம். பி. பேசுகையில், தன் வெற்றிக்குக் காரணமான மக்கள் அனைவருக்கும் வந்தனத்தைத் தெரிவித்துவிட்டு இத்தொகுதி மக்களின் குறைகளைப் போக்க என்னால் இயன்ற வரை பார்லிமெண்டில் போராடுவேன் என்று உறுதி கூறுகிறேன்" என்றார்.

பிறகு தோழர் கே. டி. கே. தங்கமணி பேசுகையில், "நாம் தேர்ந்தெடுத்த சட்டசபை அங்கத்தினர்கள் நமக்கு விரோதமாக நடந்தால் அவர்களைத் திருப்பி அழைக்கும் உரிமை நமக்கு இருக்கவேண்டுமென்றார்.

பிறகு காங்கிரஸ் ஆட்சியின் கடந்தகால அடக்குமுறைகளைப் பற்றியெல்லாம் எடுத்துச் சொல்லிவிட்டு, தொழிலாளிகளுக்கு நியாயம் கிடைப்பது எவ்வாறு குதிரைக்கொம்பாக இருக்கிறது என்பதை, எடுத்துச் சொன்னர். தொழிற் கோர்ட்டுகள், ஹைகோர்ட், சுப்ரீம்கோர்ட் ஆகியவைகள் தொழிலாளிகளுக்குச் சாதகமான தீர்ப்புகள் கொடுத்தாலும், அதை அமுல் நடத்த சர்க்காரிடம் சட்டமில்லாத சர்க்காரின் சூன்யத்தன்மையை அம்பலப்படுத்தினர்.

கோயில்பட்டித் தொழிலாளிகளின் குறைகளை பார்லிமெண்டில் எம். டி. ராமசாமி எடுத்து ஒலிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்.

…dited, Printed & Published by G. Alavandar, at Janasakthi Press, Subodaya Buildings, 38, Mount Rd., Madras 6. REGD. No. M. 5934